# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – ஐப்பசி
2021 – அக்டோபர்

112 ~~104~~



11.10.2021 அன்று நடைபெற்ற தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகள் குருபூஜை விழாவில்
மணிமேகலை உரை நூல் வெளியீட்டு நிகழ்ச்சி

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்


பிலவ – ஐப்பசி

2021 – அக்டோபர்    இதழ் – 112



சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.


## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| 1. | ஆசியுரை | 2 |
| 2. | கம்பராமாயணம் | 4 |
| 3. | ஓம் நமோ நாராயணாய | 7 |
| 4. | பரமஹம்சர் | 15 |
| 5. | பரந்தாமன் பாமாலை | 17 |
| 6. | திருக்குறள் தெளிவுரை | 23 |
| 7. | திருவிளையாடற்புராணம் | 27 |
| 8. | மேம்படு கற்பின் மிக்கார் | 32 |
| 9. | மடாலய நிகழ்வுகள் | 35 |



தனி இதழ்    ரூ **10.00**
ஆண்டுச் சந்தா    ரூ **100.00**

உ
சிவமயம்




# இறை வணக்கம்

**மாணிக்கவாசக சுவாமிகள்**

கன்றும் நெஞ்சு அழிந்து கண்டும் கண்டிலேன் மாயம் என்றும்

சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாம் சிவனே

என்றும்

ஒன்று காணுதல் ஒழிந்தேன் ஒன்றும் ஆகாதே என்றும்

நன்றுஉப நிடதத்து உண்மை நவின்றவர்க்கு அன்பு செய்வாம்.

*- கோயிலூர்ப் புராணம்*

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

அண்மையில் அக்டோபர் 11ஆம் தேதி அன்று என்னுடைய முன்னோர்கள் அருளாலும் நான் வணங்கும் எனது இஷ்டதெய்வமான பழனி தண்டாயுதபாணி அருளாலே ஆதிகுருமுதல்வர் கோவிலூர் ஆண்டவர் குருவருளாலும் நான் வரமாகப் பெற்ற இந்த குருஸ்தானத்தை அடைந்து 10 ஆண்டுகள் நிறைவுற்றன.

என்னுடைய சற்குருநாதர் தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகள் தம்முடைய உயிலில் ஆணையிட்ட வண்ணம் என்னால் இயன்றளவு இந்தக் கோவிலூர் திருமடத்தையும் கிளை மடங்களையும் குருநாதரால் நிறுவப்பட்ட அனைத்துக் கல்வி நிறுவனங்களையும் சரிவரப் பாதுகாத்தும் அவை வளர்ச்சி பெறவும் முயன்று வந்திருக்கிறேன். இன்னும் மீதம் உள்ள என்னுடைய ஆயுள் காலத்தில் முடிந்தவரையில் மடத்தை அது சார்ந்த நிறுவனங்களை மென்மேலும் உயர்த்துவதற்குப் பாடுபடுவேன் என்று உறுதிபூண்டுள்ளேன்.

சற்குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள் நிறுவிய சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழக அறநிலை அதனுடைய துணை அறநிலைகள் அனைத்திலும் பணியாற்றுகின்ற அத்தனை ஆசிரியப் பெருமக்களுக்கும் அலுவலர்களுக்கும் அத்துடன் அர்ப்பணிப்பு உணர்வுடன் உதவி வருகின்ற அனைவருக்கும் என்னுடைய மனமார்ந்த ஆசிர்வாதங்கள்.

நம்முடைய நிறுவனங்கள் அனைத்தின் அலுவலர்களும் ஒரே குடும்பமாக அன்போடும் அர்ப்பணிப்பு உணர்வோடும் ஈடுபாட்டோடும் தொடர்ந்து பணியாற்ற வேண்டும். நிறுவனங்களின் வளர்ச்சிக்கு உதவ வேண்டும் என்று வேண்டிக்கொள்கிறேன். முக்கியமாக ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்கிற மனப்பான்மையும் அனைவரிடமும் இருக்க வேண்டும் என்று உளமார எதிர்பார்க்கிறேன்.

நான் அடிக்கடி நிறுவனக் கூட்டங்களிலே சொல்வதைப் போல் ஆசிரியர்கள், அலுவலர்கள் அனைவரும் என்னுடைய மக்களாகவும் மாணவச் செல்வங்கள் அனைவரும் பேரக்குழந்தைகளாகவும் ஒற்றுமையுடன் இணைந்து நிறுவனத்தை உயர்த்த வேண்டும்.

நம்முடைய கல்வி நிறுவனங்கள் எல்லா வகையாலும் சமூகத்தில் நற்பெயர் பெறவும் புகழ்பெற்று விளங்கவும் வேண்டும் என்பது என்னுடைய ஆசை, துறவிக்கும் நல்ல ஆசைகள் இருக்கலாம் என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட விதி.

இந்த 10 ஆண்டுக் காலத்தில் கோவிலூர் வேதாந்த மரபுப் பாடங்கள் 16ம் முறைப்படி மாணவர்களுக்கு எடுத்துரைத்து வருகின்றேன். 16வது நூலான ஞானவாசிட்டம் இன்னும் 4,5 மாதங்களில் முடிக்க முடியும். 16 நூல்களையும் பாடம் நடத்திய 8வது பட்டம் சோமசுந்தர ஞானதேசிக சுவாமிகளுக்குப் பின்னர் 40 ஆண்டுகளுக்குப் பின்னர் நிறைவு செய்து ஏடு வழங்கும் சம்பிரதாய விழாவையும் விரைவில் நடத்தி முடிக்க வேண்டும் என்பதும் என்னுடைய மிகப்பெரிய ஆசை.

இந்த நல்விருப்பங்கள் நிறைவேற உங்கள் அனைவருடைய பிரார்த்தனையையும் குருமுதல்வர் கோவிலூர் ஆண்டவர் அருளாசியையும் பணிந்து வேண்டுகிறேன்.

நன்றி, ஆசிர்வாதங்கள்

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***

# கம்பராமாயணம் (தொடர்ச்சி)

## ஆரண்யகாண்டம்

**(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)**

கம்பராமாயணத்தில் மூன்றாவது காண்டமாக - பாலகாண்டம், அயோத்தியா காண்டம் ஆகியவற்றைத் தொடர்ந்து கம்பர் பாடியது ஆரண்யகாண்டம். கம்பராமாயணத்தின் மிக முக்கியமான நிகழ்ச்சிகள் நடைபெற்ற காண்டமும் இதுவே. சில அரக்கர்கள் மாளவும், சில முனிவர்கள் இராகவன் அருளாலே பரம்பொருள் திருவடி அடையவும் பெற்ற காண்டம் இது. இந்தக் கதையின் பெரும்பகுதி தண்டகவனம், பஞ்சவடி, கந்தவனம் போன்ற வனப்பகுதிகளிலே நடைபெற்றதால் ஆரண்யகாண்டம் என்று பெயர் பெற்றது. இக்காண்டத்தில் 13 படலங்கள் 1190 பாடல்கள் உள்ளன. இதில் பங்குபெறும் பாத்திரங்கள் இராமன், சீதை, இலக்குவன், சடாயு, சரபங்கர், அகத்தியர், அத்திரி முனிவர், இராவணன், சூர்ப்பனகை, மாரீசன், கரண், அயோமுகி, கவந்தன் ஆகியவர்கள் ஆவர். இந்தக் காண்டத்தில் தான் சூர்ப்பனகை இராமன் மேல் மோகம் கொண்டு அதன் விளைவாக மூக்கு அறுபட்ட நிகழ்ச்சி நடைபெறுகிறது, இராவணனை அவனுடைய காமத்தையும் அகங்காரத்தையும் தன்னுடைய சூழ்வினைத் திறமை காரணத்தால் தூண்டிவிட்டு, சீதையை அபகரித்துச் செல்லச் செய்த நிகழ்ச்சியும் இக்காண்டத்தில் தான் நடைபெற்றது. எனவே கம்பராமாயணத்தின் முதுகெலும்பும் உயிர்நாடியும் ஆகத் திகழ்வது ஆரண்யகாண்டமே.

குகனுடைய உதவியாலே படகேறிக் கங்கையைக் கடந்து மறுகரை சேர்ந்து பின்னர் குகனிடம் பிரியா விடைபெற்றுத் தென்திசை நோக்கி இராமர் சீதை இலக்குவன் பயணப்பட்டனர்.

அப்பொழுது விராதன் என்ற அரக்கன் அவர்கள் முன்தோன்றி நான் என்னுடைய தவப்பயனாகப் பிரம்மனிடம் இருந்து 1 1/4 லட்சம் ஆண்டுகள் வாழ்நாட்களை வரமாகப் பெற்றவன். அற்பநரர்களே உங்களுக்கு உயிர்ப் பிச்சை தருகிறேன். இங்கிருந்து உடனே ஓடிவிடுங்கள் என்று பயமுறுத்தினான். இராமர் இலக்குவர் சற்றே குறும்பு செய்ய விரும்பி அசையாது புன்முறுவலோடு நின்றார்கள்.

அதைப் பார்த்த விராதன் மூர்க்க வெறி கொண்டு சீதையைத் தூக்கி வானில் சென்றான். இனிமேல் விளையாட்டிற்கு இடம் இல்லை என்று உணர்ந்து நீண்டு நெடிதுயர்ந்திருந்த விராதன் தோள்மேல் ஏறி உட்கார்ந்தனர். உடன் விராதன் சீதையைக் கீழே விட்டுவிட்டு இருவரையும் தூக்கிக் கொண்டு வானத்தில் பறக்கத் தொடங்கினான். இதைப் பார்த்து, சீதை அஞ்சி என் உயிரை உனக்கு உணவாக எடுத்துக் கொள். அவர்களை விட்டுவிடு என்று அலற இராமனும் இலட்சுமணனும் அரக்கனுடைய கரங்களை வெட்டித் துண்டுபடுத்திக் காலால் உதைத்துக் குழியில் தள்ளிப் புதைத்தனர்.

இராமன் திருவடிகள் பட்டதும் அரக்கன் மீண்டெழுந்து இரு கரங்கள் கூப்பி இராமன் பரம்பொருள் என்பதை உணர்ந்து, போற்றிப் பாடினான். அவன் புகழ்ந்து பாடிய 14 பாடல்களும் வேதாந்த தத்துவ சாரமாக உள்ளன. பின்னர் தன்னுடைய முற்பிறவிக் கதையை இராம லட்சுமணர்க்குச் சொன்னான். தும்புரு என்ற பேரோடு கந்தர்வனாகக் குபேரனுடைய பணியாளாக வாழ்ந்தவன். இடையில் செய்த காமக் குற்றத்தாலே அரக்கனாகச் சாபம் பெற்று இக்காட்டில் வாழ்ந்தேன். உங்களுடைய திருவடி தீட்சையினாலே என் சுயரூபம் அடைந்து குபேரலோகம் செல்கிறேன் என்று கூறிச்சென்றான்.

சரபங்கர் என்றால் மன்மதனுடைய மலர் அம்புகளை எதிர்த்து வென்றவர், ஆசைகள் இல்லாதவர் என்பது பொருள். பற்பல யுகங்கள் தவம் புரிந்து இறைவன் அருள்பெற்ற அருந்தவ முனிவர். அவர் குடிலை இராமர் சீதை இலக்குவன் மூவரும் சென்றடைந்தனர். அப்பொழுது அங்கே இந்திரன் நேரில் வந்து பிரம்மலோக பதவியை விரும்பாது வீடுபேறு அடைதலே தன் நோக்கம் என்று இராமரிடம் தெரிவித்து அவருடைய திருவடிகளிலே வணங்கி அவருடைய அருளாலே வீடுபேறு அடைந்தார்.

அடுத்து மூவரும் தண்டகவனத்திற்கு வந்தார்கள். அங்கே தவசிகள் அரக்கர்களாலே துயரப்படுத்தப்பட்டுத் தவத்தைப் பூர்த்தி செய்ய முடியாததைக் கண்டு அவர்களுக்கு உதவுவதாக வாக்களித்து அந்தத் தண்டகவனத்திலே 10 ஆண்டுகள் தங்கித் தவசிகளுக்கு ஆதரவு அளித்து உதவினார்கள். பின்னர் அவர்களுடைய விருப்பத்தின் வண்ணம் அகத்தியரைச் சந்திக்க வந்தார்கள்.

அகத்திய முனிவர் தவத்தாலும் ஞானத்தாலும் மிக உயர்ந்த நிலை அடைந்தவர். இவரைப் பற்றி வரலாற்றுச் செய்திகள் நிறைய உள்ளன. சிவன் பார்வதி திருமண நாளன்று தேவர்கள் துறவியர் கூட்டத்தாலே வடதிசை தாழ, தென்திசை உயர்ந்து நிற்பது கண்டு அகத்தியரைத் தட்சிணமேரு அனுப்பி நிலைமையைச் சரிசெய்ய ஆணையிட்டார் பரமசிவன். ஏற்றத்தாழ்வைச் சீர்செய்த அரிய பெருமைக்குரியவர் அகத்தியர்; வாதாபியை விழுங்கி மக்களை, தேவர்களைக் காத்தவர். தன் சொல்லிற்கு அடங்காத காவிரியைக் கெண்டியில் அடைத்துக் கவிழ்த்து, காவிரியை ஓடச் செய்தவர். இப்படிப்பட்ட அகத்தியரைச் சந்தித்து ஆசிபெற்றார்கள். அகத்திய முனிவர்

***நன்று வரவு, என்றுபல நல்உரை பகர்ந்தான்***
***என்றும் உளதென்தமிழ் இயம்பிஇசை கொண்டான்.***

அகத்தியர் ஆசிர்வதித்துத் திருமால் தனக்கு அளித்த வில்லையும் அம்பையும் மற்றையப் படைக்கலன்களையும் இராமருக்கு அளித்து அருகில் உள்ள பஞ்சவடியில் தங்கித் தவம் இயற்றுமாறு அறிவுறுத்தினார். பஞ்சவடிக்குச் செல்லும் வழியில் ஜடாயு என்ற கழுகின மன்னனைச் சந்தித்தார்கள். ஜடாயு நீங்கள் யார் எனக் கேட்க, தசரதன் மைந்தர்கள் என்றனர். அது கேட்டு என் நண்பன் தசரதன் நலந்தானே எனக் கேட்டு, தசரதனுக்கும் தனக்குமான நட்பை மக்களுக்கு எடுத்துக் கூறினார். தசரதன் பரமன் அடி சேர்ந்ததைக் கேட்டு மிக்க துயரடைந்தார். சடாயுவைத் தேற்றி வருத்தம் தீர்த்தபின். மூவரும் புறப்பட்டுப் பஞ்சவடி அடைந்து பர்ணசாலையை அமைத்துத் தங்கினர். பர்ணசாலை மிக அழகாகச் சகல வசதிகளோடும் அமைத்தவன் இலக்குவன்.

அதில் தங்கியிருந்த காலத்தில் தான் சூர்ப்பனகை பார்த்தது, பொய்மான் வந்தது, அதனைக் கொன்றது, இராமரும் பொய்மானை (மாரீசனை) அம்பு எய்தி வதம் செய்த காலத்தில் பர்ணசாலையோடு சீதாப்பிராட்டியை இராவணேஷ்வரன் தூக்கிச் சென்றது அனைத்தும் நடந்தன.

*(தொடரும்...)*

**ஓம் நமோ நாராயணாய!** 108 திவ்யதேசங்கள்

## 13. திருவிண்ணகர் என்னும் ஒப்பிலியப்பன் கோவில்

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் பதின் மூன்றாவது திவ்ய தேசம், திருவிண்ணகர் என்னும் ஒப்பிலியப்பன் கோவில். சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது பதின்மூன்றாவது திருத்தலமாகும். இத்தலம் கும்பகோணத்தில் இருந்து தென்கிழக்கில் காரைக்கால் செல்லும் நெடுஞ்சாலையில் 8கி.மீ தொலைவில் உள்ளது. இராகு பரிகார ஸ்தலமான திருநாகேஸ்வரத்திற்கு அருகில் இக்கோயில் அமைந்துள்ளது.

108 திவ்ய தேசங்களில் ஆறு விண்ணகரங்கள் உள்ளன.

1. திருவிண்ணகரம் - ஒப்பிலியப்பன் கோவில்
2. சீராம விண்ணகரம் - திருக்காழி தாடாளன் கோவில்
3. அரிமேய விண்ணகரம் - திருநாங்கூர் குடமாடுகூத்தன் கோவில்
4. வைகுந்த விண்ணகரம் - திருநாங்கூர் வைகுந்தநாதன் கோவில்
5. நந்திபுரம் விண்ணகரம் - கும்பகோணம் அருகிலுள்ள நாதன் கோவில்
6. பரமேச்சுர விண்ணகரம் - பரமபதநாதன் கோவில், காஞ்சிபுரம்

விஷ்ணுவின் வசிப்பிடமே விண்ணகரம் எனப்படுகிறது.

ஒரு சமயம் திருத்துழாய்த் தேவி, திருமாலிடம் திருமகளை மட்டும் மார்பில் தாங்கியுள்ளீர்களே, எனக்கும் அதுபோன்ற சிறப்பு வேண்டுமெனக் கேட்டார். அதற்குத் திருமால், திருமகள் கடுந்தவம் புரிந்து என் மார்பில் இடம் பெற்றிருக்கிறாள். அவள் மீண்டும் பூவுலகு சென்று பூமிதேவியாகக் காவிரிக்கரையில் தோன்றவிருக்கிறாள். அவளுக்கு முன்பாக நீ சென்று துளசிச் செடியாக அங்கு தோன்று. உன் மடியில் இலக்குமி பூமிதேவியாக அவதரிப்பாள். பின்னொருநாள் நான் பூமிதேவியை ஏற்றுக் கொள்வேன். ஸ்ரீதேவி பூதேவியாக உன்மடியில் அவதரித்ததால், திருமகளை விடச் சிறந்த பேற்றினைப் பெறுவாய். துளசி இலைகளால் என்னைப் பூசிப்பவர்கள் அசுவமேத யாகத்திற்கு உண்டான பலனைப் பெறுவார்கள். உன் வனத்தை

உறைவிடமாகக் கொண்டு உறைபவர்கள் வைகுந்தம் செல்வார்கள். எப்போதும் நீ என் நெஞ்சை அலங்கரிக்கும் துளவ மாலையாவாய். துளசி மாலையை ஏற்றுக் கொண்டபின்தான் நான் பூதேவியை மணம் புரிவேன் என்று அருளினார்.

மிருகண்டு மகரிஷியின் புதல்வரான மார்க்கண்டேயர், திருமகள் தனக்கு மகளாவும், திருமால் தனக்கு மாப்பிள்ளையாகவும் வரவேண்டும் என்றெண்ணி, நீண்ட நாள் பேராவல் கொண்டவராய் இருந்தார். தனது எண்ணம் ஈடேற, தவமியற்ற, இத்தலமே தகுந்த இடம் என்று உணர்ந்து, இவ்விடத்தில் திருமாலைக் குறித்துத் தவமியற்றினார். அப்போது, திருமகள் மழலைக் குழந்தையாகத் திருத்துழாய்ச் செடி மடியில் பூமிதேவியாகத் தோன்றினாள். அக்குழந்தை திருமகளே என்றுணர்ந்து எடுத்து வளர்த்துவந்தார்.

பூமிதேவி திருமணப் பருவத்தை எய்திய சமயம், ஒருநாள் பங்குனி மாதம் ஏகாதசி கூடிய திருவோண நாளன்று, திருமால் கிழவர் வேடம்கொண்டு, திருமகளைப் பெண் கேட்டார். முதியவர் வேடத்தில் வந்ததால், மார்க்கண்டேயர் தமது மகளைக் கொடுக்க மனமில்லாமல், என் மகள் சின்னஞ்சிறியவள். அவளுக்குச் சமைக்கத் தெரியாது. உணவில் உப்பு சேர்க்கத் தவறினால் நீங்கள் கடிந்து கொள்ளக்கூடும். இது ஒத்துவராது என்று கூறிவிட்டார். உங்கள் மகள் சமைக்கும் உப்பில்லாப் பண்டமே எனக்கு உகந்தது. உங்கள் பெண்ணை மணக்காமல் இவ்விடம் விட்டு நகர மாட்டேன் என்று கூறிய பெருமாள் அங்கேயே அமர்ந்து விட்டார். செய்வதறியாது திகைத்த மார்க்கண்டேயர், நிஷ்டையிலமர்ந்து தனது தபோபலத்தால் வந்திருப்பவர் திருமாலே என உணர்ந்து, கண் திறந்து பார்த்தார். அங்கு சங்கு சக்கரதாரியாகப் பெருமாள் காட்சியளிக்க, அப்படியே தண்டனிட்டு வணங்கிய மார்க்கண்டேயர், திருமாலைத் தனது மாப்பிள்ளையாக ஏற்றுக் கொண்டார். அன்று முதல் ஒப்பிலியப்பன் உப்பிலியப்பன் ஆனார்.

பங்குனி மாதத் திருவோண நட்சத்திரத்தன்று பெண் கேட்டு வந்த திருமால், பூமிதேவியை இந்தத் துளசிவனத்தில், ஐப்பசி மாதம்

திருவோண நட்சத்திரத்தன்று திருமணம் செய்து கொண்டார். பெரிய திருவடியான கருடர் கல்யாண ஓலையை, பிரம்மன், இந்திரன், வருணன், அக்னி என எல்லோரிடமும் கொடுத்து அழைக்கின்றார். மொத்த தேவலோகமும் பூலோகத்திற்கு வர, இந்திராணி, சரஸ்வதி போன்ற தேவலோக மாதர்கள், பூமிதேவியை அலங்கரிக்க, மார்க்கண்டேயர் கன்னிகா தானம் செய்ய, திருமணம் கோலாகலமாய் நடந்தது.

மூலவர் : ஒப்பிலியப்பன்

உற்சவர் : பொன்னப்பன்

தாயார் : பூமாதேவி

விமானம் : சுத்தானந்த விமானம் (தரிசிப்பவர்க்கு முழுமையான ஆனந்தம் தரும் விமானம்)

தீர்த்தம் : அஹோராத்ர புஷ்கரணி (இரவு பகல் என்றில்லாமல் 24 மணி நேரமும் நீராடலாம்) மற்றும் ஆர்த்தி புஷ்கரணி, சார்ங்கத் தீர்த்தம், சூர்ய தீர்த்தம், இந்திர தீர்த்தம்

தலவிருட்சம் : துளசி

கோலம் : கிழக்கு நோக்கிய நின்ற திருக்கோலம்

இத்தலம் துளசிவனம், ஆகாசநகரம், மார்க்கண்டேய ஷேத்திரம், தென்திருப்பதி போன்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றது. இத்தலம் வைகுந்தத்திற்குச் சமமானதாகப் பேசப்படுவதால், ஆகாசநகரம் என்றழைக்கப்படுகின்றது. மார்க்கண்டேய முனிவர் இத்தலத்தில் தவம் இயற்றியதால், மார்க்கண்டேய ஷேத்திரம் எனவும், திருத்துழாய்க் காட்டில் பூமிதேவியாகத் திருமகள் அவதரித்ததால், துளசி வனம் என்றும் அழைக்கப்படுகின்றது.

திருப்பதி போக இயலாதவர்கள் வேங்கடேசனுக்குச் செய்துகொண்ட பிரார்த்தனைகளை இங்கேயும் செலுத்தலாம். இத்தலத்திலுள்ள பெருமாள் திருப்பதி ஸ்ரீனிவாசனுக்குத் தமையனாராகக் கருதப்படுகிறார். திருப்பதி வெங்கடாசலபதிக்கு உள்ளது போல் இப்பெருமானுக்கும் தனி சுப்ரபாதம் உண்டு. திருப்பதியில் இருப்பது போன்ற நின்ற திருக்கோலம்.

சுமார் எட்டடி உயரத்தில், சாளக்கிராமமும் செண்பகமாலையும் அணிந்தபடி நான்கு திருக்கரங்களுடன் திருக்காட்சி தருகிறார் ஒப்பிலியப்பன். மேலிரு கரங்களில் சங்கு-சக்கரம் ஏந்திக் கொண்டிருக்கிறார். கீழிரு கரங்களில், இடது கரத்தைத் தொடையில் வைத்தபடி காட்சி தருகிறார். கீழ் வலக்கரத்தில் தன் திருவடியைக் காட்டியபடி காட்சி தருகிறார். மாம் ஏகம் சரணம் வர்ஜ, அதாவது என்னைச் சரணடைந்தால் உன்னைக் காப்பாற்றுவேன் என்ற சமரஸ்லோகப் பகுதி, எம்பெருமானின் வலக்கையில் வைரங்களால் பொறிக்கப்பட்டுள்ளது.

வழக்கமாக, பெருமாளுக்கு இடப்புறம் பூதேவி இருப்பாள். ஆனால் இங்கு பூதேவியை விஷ்ணு மணம் புரிந்ததால், மணப்பெண் நிற்பது போல் வலப்புறத்தில் கீழே வடக்கு நோக்கி, மண்டியிட்டு வணங்கும் திருக்கல்யாணக் கோலத்தில் இருக்கின்றாள். இது பூதேவியின் தலம். ஆதலால் இங்கு தாயாருக்கு தனிச்சந்நதி கிடையாது. பெருமாளுக்கு இடப்புறம் மார்க்கண்டேயர் தெற்கு நோக்கி அமர்ந்து கன்னிகாதானம் செய்யும் கோலத்தில் காட்சி தருகிறார்.

மார்க்கண்டேயர், பூமாதேவியை மணம் முடித்துக் கொடுத்தபோது தன் மகளை விட்டு ஒரு போதும் பிரியக் கூடாது என்று பெருமாளுக்கு நிபந்தனை விதித்தார். எனவே அனைத்து விழாக்களிலும் ஒப்பிலியப்பன் பூதேவியுடன் இணைந்தே பவனி வருவார். ஆனால், நவராத்திரி உற்வசத்தில் அம்பு போடும் வைபவத்தின் போது மட்டும், சுமார் ஒருமணி நேரம் பெருமாள் தனியே செல்வார். அப்போது மூலஸ்தானத்தில் தாயார் சிலையைத் திரையிட்டு மறைப்பர்.

இங்கு நடைபெறும் சிரவண தீபம் விசேஷமானது. மாதந்தோறும் திருவோண நட்சத்திரத்தன்று பக்தர்கள் இங்குள்ள திருக்குளத்தில் நீராடி பகல் 11 மணிக்கு மூவகை தீபம் கொண்ட சிரவண தீபத்தைத் தரிசிக்கின்றனர். இங்கு துலாபாரம் உண்டு. உப்பு தவிர்த்து, அனைத்துப் பொருட்களையும் துலாபாரத்தில் காணிக்கையாகச் செலுத்தலாம்.

என் அய்யா, காப்பியக்கவிஞர், நற்றமிழ்நாவலர் கவிஞர்கோ

நா.மீனவனார் திருவிண்ணகர் குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் பரந்தாமன், முதலை வாய்க்குட்பட்ட யானையின் குரல் கேட்டு, கருடன் மீதேறி வந்து யானையைக் காத்த பெருமான் துளவமாலையை மார்பில் அணிந்து கொண்ட கோலத்துடன் இவ்விண்ணகரில் இருக்கின்றான். அவன் அடியவராய் இருப்போர்க்குப் பரமபதம் நிச்சயமே எனக் கூறும் முதல்பாடல் :

***பாலாழி மிசைத்துயிலும் பரஞ்சுடரான் வேழமிடும்***
***ஓலத்தால் புள்ளேறி உடன்வந்து காத்தபிரான்***
***கோலத்தார் துளவமெனக் கொண்டான்வாழ் விண்ணகரம்***
***பாலித்தார் அடியவராய்ப் பரமபதம் வைகுவரே***

2. கௌசிக முனிவரின் புதல்வர் மிருகண்டு. அவர் மனைவி மருத்துவதி. அவர்கள் ஆண் மகவு வேண்டித் தவம் செய்தனர். அப்படி அவதரித்த மைந்தன் தான் மார்க்கண்டேயன். அவனுக்கும் வயது 16 மட்டுமே என்பது பிரம்மன் கணக்கு. மார்க்கண்டேயன் சிறந்த சிவபக்தன். அவன் வயது பதினாறு ஆனதும், அவன் உயிரைக் கவர்ந்து செல்ல எமதர்மன் வந்து சேர்ந்தார். சிவபூஜையில் இருந்த மார்க்கண்டேயனை எமன் வந்து அழைத்ததும், மார்க்கண்டேயன் அப்படியே சிவலிங்கத்தைக் கட்டிக் கொண்டான். எமன், மார்க்கண்டேயனுடன் சிவலிங்கத்தையும் சேர்த்துப் பாசக்கயிற்றால் இழுத்தான். சிவபெருமான் லிங்கத்திலிருந்து வெளிப்பட்டு காலனை உதைத்தார். காலன் வீழ்ந்தான். மார்க்கண்டேயன் என்றும் பதினாறு என்னும் வரம் பெற்றான்.

என்றும் பதினாறு வரம் பெற்ற மார்க்கண்டேயர், இத்தலத்தில் திருமகளை மகளாக அடைந்தார். பெண் கேட்டு வந்த பெருமானிடம், பெண்ணிற்குச் சரியாக உப்பிட்டுச் சமைக்கத் தெரியாது என்று மார்க்கண்டேயர் சொல்ல, பெருமாளோ, இன்று முதல் உப்புள்ள உணவை உண்ணப் போவதில்லை, என்று உரைத்த தலம் இதுதான் எனக் கூறும் இரண்டாம் பாடல் :

***என்றும் பதினாறாய் இருக்கின்ற மார்க்கண்டன்***
***அன்று திருமகளை மகளாக அடைநாளில்***
***நன்றுமணம் கொளவந்த நம்பியோ முனிவரிடம்***
***இன்று முதல் உணவுண்ணேன் என்றுரைத்த தலமிதுவே.***

3. கருடன், காவேரி ஆகியோருக்குக் காட்சி தந்தவர், இத்தலத்தில் இருக்கும் ஒப்பற்ற அழகுடைய பெருமான். எவர்க்கும் ஒப்பாரில்லாத, நிகரில்லாத பெருமான் உறைந்திருப்பதால், இத்தலம் ஒப்பிலியப்பன் கோவில் என அழைக்கப்படுகின்றது. காலப்போக்கில், ஒப்பிலியப்பன் உப்பிலியப்பன் ஆனார். உப்பிலியப்பனுக்கு உப்பில்லா நிவேதனமே உகந்தது என்பதால் இன்றும் உப்பில்லாத் திருவமுதைப் பெருமாளுக்கு நிவேதனம் செய்கின்றனர். உப்புள்ள பண்டங்களைக் கோயிலுக்குள் எடுத்துச் செல்லுதல் கூடாது. லவணம் என்ற உப்பின் சுவையை நீக்கிய பெருமாள் என்பதால், இவர் லவண வர்ஜித பெருமாள் என அழைக்கப்படுகிறார். இவ்வாறு, உப்பை உண்ணாத உப்பிலியப்பன் இந்த உலகத்தின் மேல், ஒப்பில்லா விண்ணகரத்தில் வந்து உறைந்திருக்கின்றான். அவனது திருப்பாதங்களே சரண் என்போர் நலம்பெறுவர். ஆதலால் அவனை எப்பொழுதும் வணங்கச் சொல்லும் மூன்றாம் பாடல்.

***கருடன்முதல் காவேரி காட்சிபெற அருளியவன்***
***ஒருநாளும் உப்புண்ணா உப்பிலியான் வையமிசைப்***
***பொருவரிய விண்ணகரம் போந்துறைவான் திருப்பாதம்***
***சரணென்பார் நலம்பெறுவர் சந்ததமும் வணங்குமினே.***

4. கரும்பு போன்று இன்சொல் பேசி, கடல்முத்துப் போன்று புன்முறுவலைக் காட்டிநிற்கும் பூமிதேவியுடன், தொன்றுதொட்டு வரும் பிறவியைப் போக்கி நமக்குப் பெரும்பயனை அளிப்பதற்காக, விண்ணகரத்தில் இருப்பவனைப் போற்றச் சொல்லும் நான்காம் பாடல் :

***கரும்பனைய மென்சொல்லி கடல்தரளம் போல்முறுவல்***
***அரும்பிவரும் இளநகையாள் அழகுமலைப் பூதேவி***
***பெரும்பயனை நமக்களிக்கும் பேறுடைய விண்ணகரம்***
***இரும்பிறவி போக்கவென இருப்பானைப் போற்றுமினே***

5. மகாபாரதத்தில் நடந்த ஒரு நிகழ்வு. சேதி நாட்டு மன்னனுக்கு மகனாகப் பிறந்தவன் சிசுபாலன். பிறக்கும் போதே நான்கு கரங்களுடனும் மூன்று கண்களுடனும் பிறந்தான். அப்போது, ஓர் அசரீரி, யார் மடியில் வைக்கும்பொழுது அக்குழந்தையின் வேண்டாத உறுப்புகள் மறைகிறதோ, அவராலேயே இப்பிறவியின் மரணமும் சம்பவிக்கும் என்று கூறியது. கண்ணனின் அத்தை மகன்தான் இந்த சிசுபாலன். கண்ணனின் மடியில் குழந்தையைக் கிடத்தியதும் வேண்டாத உறுப்புக்கள் மறைந்தன. சிசுபாலன் செய்யும் நூற்றியெட்டுக் குற்றங்களை மன்னிப்பதாகவும், அதுவரை அவனைக் கொல்லாதிருப்பதாகவும், கண்ணன் சிசுபாலனின் தாயாருக்கு உறுதிகொடுத்தார்.

சிசுபாலன் விரும்பிய ருக்மணிதேவி, கண்ணனை விரும்பித் திருமணம் செய்து கொண்டது, அவன் பகையை மேலும் தீவிரமாக்கியது. பாண்டவர்கள் இந்திரபிரஸ்தத்தில் ராஜசூய யாகம் நடத்தினர். அப்பொழுது அவர்கள் கிருஷ்ணருக்கு முதல் மரியாதை செய்ய எண்ணினர். அதை ஏளனம் செய்த சிசுபாலன், சபையினர் முன்பு கிருஷ்ணரை அவமதிக்கும் விதமாக நடந்து கொண்டான். அவன் திட்டிய வார்த்தைகளை, தன்னைப் பூஜித்த மந்திரமாக நூற்றியெட்டு அர்ச்சனைகளாக ஏற்றுக் கொண்டு, அந்தப் புண்ணியமும் சிசுபாலனைச் சேர வழிசெய்தான் கண்ணன். இனிக் காலம் கடந்தால், அவன் பாவம் செய்து விடுவான், மோட்சம் செல்லும் தகுதி பெறப் புனிதமான இடத்தில், புனிதமான ஆயுதத்தால் மடிய வேண்டும் எனக் கண்ணன் எண்ணினான். மஹா சுதர்சனம் அவனது சிரத்தை அறுக்க, அவன் உடல் ராஜசூயமான பூமியில் விழ, அந்தப் புண்ணிய பலனால், அவன் ஆன்மா மோட்சமடைந்தது. தீமைக்கும் நன்மை செய்யவே, யாக பூமியை யுத்த பூமியாக்கிச் சிசுபாலனை மோட்சம் அடையச் செய்தான் கண்ணன். இவ்வாறு சிசுபாலனை அழித்த கண்ணன், பாண்டவர்களுக்கு அருள்செய்த நம் பரந்தாமன் உறைந்துள்ள இத்தலத்தை நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பேயாழ்வார் ஆகிய நான்கு ஆழ்வார்கள் மொத்தம் 47 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

நம்மாழ்வாருக்குத் திருவிண்ணகர் அப்பன், பொன்னப்பன், மணியப்பன், முத்தப்பன், என்னப்பன் ஆகிய ஐந்து வடிவங்களில், அதாவது பஞ்ச கோலத்தில் பெருமாள் காட்சியளித்து அவரை ஆரத் தழுவினார். இந்த ஐந்து பெயர்களையும் சேர்த்து நம்மாழ்வார் பாசுரம் ஒன்றைப் பாடியுள்ளார்.

என்னப்பன் எனக்காயிகுளாய் என்னைப் பெற்றவளாய்
பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பன் என்னப்பனுமாய்
மின்னப்பொன் மதில்சூழ் திருவிண்ணகர் சேர்ந்தவப்பன்
தன்னொப்பார் இல்லப்பன் தந்தனன் தனதாள்நிழலே.

பன்னிரு ஆழ்வார்களும் இத்தலத்தில் தனிச்சந்நதியில் வீற்றிருக்கிறார்கள். ஆலயச் சுவர்களில் திருப்பாவைப் பாசுரங்களும், தசாவதாரமும் சித்திரமாகத் தீட்டப்பட்டுள்ளன. ஆழ்வார்கள் ஓதுகின்ற தமிழ்ப் பாசுரங்களில் மகிழும் ஒப்பிலியப்பனின் பாதமலரை விண்ணகரில் பணிந்துய்ய வரச் சொல்லும் ஐந்தாம் பாடல்.

***சேதிப் பதிவேந்தன் சிசுபாலன் போயொழிய***
***ஆதியிலே பாண்டவர்க் கருள்செய்த அருட்கண்ணன்***
***ஓதுதமிழ்ப் பாசுரத்தில் உளமகிழ்ந்த ஒப்பிலியான்***
***பாதமலர் விண்ணகரில் பணிந்துய்ய வருவீரே***

**மங்களாசாசனப் பாடல் :**

வற்றாத பெரிய கடல் சூழ்ந்த இலங்கையில் இராவணனை அழித்த அயோத்தி மன்னனான இராஜாஇராமா! திருவிண்ணகரத்தில் உறைபவனே! நான் வேறொரு தெய்வத்தை மனத்தாலும் எண்ணுவதில்லை. உன்னை என் உள்ளத்தில் இருத்திக்கொள்ளும் பாக்கியம் பெற்றேன். அதனால் எனக்குக் கிடைத்தது இனிப் பிறவாமையே என்று கூறும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

***மற்றோர் தெய்வம் எண்ணேன் உன்னை என் மனத்து வைத்துப்***
***பெற்றேன் பெற்றதுவும் பிறவாமை எம் பெருமான்***
***வற்றா நீள் கடல் சூழ் இலங்கை இராவணனைச்***
***செற்றாய்! கொற்றவனே! திருவிண்ணகரானே!***

*(தொடரும்...)*

# பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள்

**தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்**

**61**

நமது மனப்பான்மைக்கு ஏற்பவே உலகம் நலம் நிறைந்ததா? அல்லது கேடு நிறைந்ததா? என்று தென்படும். ஒரு பூனையின் பல் போன்றது இந்த உலகம். பூனையின் பல் எப்படிப்பட்டது? என்று பூனைக் குட்டியிடம் கேட்டால், ஆகா அது கருணையே வடிவாக இருக்கிறது என்று சொல்லும். மாறாக, பூனையின் பல் எத்தகையது? என்று ஓர் எலிக்குஞ்சிடம் கேட்டால், அது மிகமிகக் கொடியது என்றுதான் பதில் வரும்.

**62**

அவரவரும் அவரவர் மனப்பாங்கிற்கு ஏற்பவே தெய்வத்தை உணர்கின்றனர்; வழிபாடும் செய்து கொள்கின்றனர். சற்று வெகுளியான தமோ குணம் உடையவன், தெய்வத்தைத் திருப்திப் படுத்தும் முறையாக ஆடுகளைப் பலிகொடுக்கிறான்; ரஜோ குணம் உடையவன், அறுசுவையுடன் படைத்த அன்ன வகைகளைப் படைக்கிறான். சத்துவ குணம் படைத்தவன் வெளி ஆடம்பரம் எதுவும் பண்ணுவதில்லை; கங்கை தீர்த்தம் எடுத்து அபிஷேகம் செய்து, வில்வ இலைகளைச் சமர்ப்பணம் செய்துவிட்டு நிறைவு அடைகிறான்.

**63**

ஒரு மலர்மீது உட்காருவதற்கு முன்பு, தேனி ரீங்காரமிட்டு ஓசை கிளப்புகிறது; மலர்மீது உட்கார்ந்து, தேனை அருந்தத் தொடங்கும் போது, ஓசை கிளப்புவதில்லை; பரம் பொருள் ஒன்று உண்டு என்று ஒருவன் உணர்வதற்கு முன் அவன் நிரம்பவே பேசுவான்; உரத்தும் பேசுவான்; சாஸ்திரங்கள், விதி முறைகள் என்றெல்லாம் அதிகம் பேசுவான். இறைவனை உணர்ந்து, அவனோடு இணங்கிப்போகிற அனுபவக் காலங்களில் பக்தன் அதிகம் பேசுவதில்லை.

**64**

வாளும் அது செருகப்பட்டிருக்கும் உறையும் ஒன்றோடு ஒன்று சார்ந்திருப்பது போலத் தோன்றும்; ஆனால் அவை இரண்டும் வேறு வேறானவை; அதுபோலவே, ஆத்மாவும், உடலும் வேறு வேறானவை.

## 65

மீன் பிடிக்க வேண்டும் என்று ஆசை கொண்டவன், ஒரு குறிப்பிட்ட குளத்தில் நல்ல மீன்கள் கிடைக்குமா? என்று தெரிந்து கொள்ள விரும்புகிறான்; குளத்தில் ஏற்கனவே மீன் பிடித்த ஒருவனிடம் சென்று, இந்தக் குளத்தில் பெரிய, பெரிய மீன்கள் கிடைக்கின்றன என்று சொல்கிறார்கள், உண்மைதானா? என்று கேட்கிறான். ஆமாம், பெரிய, பெரிய மீன்கள் கிடைக்கின்றன என்று தெரிந்து கொண்டதும், தூண்டிலை எடுத்துக் கொண்டு, குளத்துக்குச் சென்று, இடம்பார்த்துத் தூண்டிலைக் குளத்தில் போட்டு, பொறுமையுடன் காத்திருந்து அழகிய, பெரிய, பெரிய மீன்களைப் பிடித்துக் கொள்கிறான்; அதைப்போலவே, ஞானிகளும், ரிஷிகளும் சொல்லிவைத்துள்ள வார்த்தைகளில் முழுநம்பிக்கை வைத்துப் பக்தி வைக்கவேண்டும்.

## 66

காற்று அடிக்காமல் இருக்கும் போது உஷ்ணத்தைத் தணிக்க நாம் சிறு விசிறியை எடுத்து விசிறிக் கொள்கிறோம். ஆனால், போதுமான அளவு, ஆள்வித்தியாசம் பார்க்காமல், காற்று அடிக்கத் தொடங்கியவுடன் விசிறி கொண்டு விசிறுவதை நிறுத்திக் கொள்கிறோம். அப்படித்தான் இறைவனின் அன்பும் அருளும் கிடைத்தவுடன் ஜபம், தவம் ஆகியவற்றை நிறுத்திக் கொள்ளலாம்.

## 67

குடியானவர்கள் தங்கள் நெல் வயல்களுக்குத் தண்ணீர் கொண்டு போவார்கள்; தண்ணீர் வெளியே ஒழுகிப்போய் விடாமல் இருப்பதற்காக, வயல்களில் வரப்புகள் அமைத்திருப்பார்கள். தங்களது மிகுதியான உழைப்பைச் செலுத்தி இவ்வாறு வரப்புகள் அமைத்தாலும் வரப்புகளில் ஏற்படும் துவாரங்கள் வழியே தண்ணீர் ஒழுகி வெளியே ஓடிப்போய் விடும். மனிதர்கள் வாழ்க்கையின் ஜபமும் தவமும் பண்ணுவது உண்மைதான்; ஆனால் ஆசைகள், பற்றுக்கள் என்னும் துவாரங்கள் வழியே ஒழுகிப் போய்விடுகின்றன.

## 68

குழந்தைகளிடம் பேதம், வித்தியாசம் என்பதெல்லாம் இருப்பதில்லை. சாதிகள், வேற்றுமைகள் என்ற எண்ணங்களும் இருப்பதில்லை; சாதாரணமான, கீழ்க்குலத்தவன் ஒருவனைச்

சுட்டிக்காட்டி, ஒரு தாய், தன் குழந்தையிடம், இவன் உன் தமையன் என்று சொல்லிவிட்டால் போதும், குழந்தை அப்படியே நம்பிப் பழகும்; சேர்ந்து உறவாடும் ஞானிகள் என்போர், அப்படித்தான், மேல் – கீழ் என்று, எப்போதும் எவ்விதப் பாகுபாடும் பார்ப்பதில்லை.

**69**

ஒரு மனிதனுக்கு கடன் அதிகம் ஆகிவிட்டது. அதனின்றும் தப்பித்துக் கொள்வதற்காக அவன் பைத்தியம் பிடித்தவனைப் போலப் பாசாங்கு செய்ய ஆரம்பித்தான். வைத்தியர்களும் அவனுக்கு வைத்தியம் செய்து பார்த்தார்கள். ஒன்றும் புலப்படவில்லை; இவன் பைத்தியம் பிடித்தவனைப் போல நடிக்கிறான் என்று ஒரு வைத்தியர் கண்டு பிடித்துவிட்டார். அவனிடம் நீ இப்படிப் பாசாங்கு செய்து நடித்துக் கொண்டே இருந்தால், உனக்கு உண்மையாகவே பைத்தியம் பிடித்துவிடும் யாரும் காப்பாற்ற முடியாது என்று எச்சரித்தார். இறுதியில் அவன் சாதாரண நிலைக்கு வந்துவிட்டான்.

**70**

தனக்கு அமைந்த குருநாதரின் சில கெட்ட குணங்களைப் பற்றி, அவருடைய சீடன் ஒருவன் விளக்கி, விளக்கிப் பேசிக் கொண்டிருந்தான். அதுகுறித்துப் பரமஹம்சர் சொல்கிறார். நீ, ஏன், இந்தப் பிரயோஜனமற்ற வேலையில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறாய்? இது நீ செய்யும் வீணான வாக்குவாதம் ஆகும்; உனக்கு அவர் உரைத்த நல்ல உரைகள் என்ற நன் முத்துக்களை மட்டும் எடுத்துக் கொள்; பிறவற்றை வீசி எறிந்து விடு என்றார்.

*(தொடரும்...)*

## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 11

தமிழாகரர் தெ.முருகசாமி

(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

சென்னையைத் தருமமிகு சென்னை எனவாய்மணக்கப் பாடிய வடலூர் வள்ளல் பெருமானின் வாக்கிற் கேற்பக் காப்பியக் கவிஞர் மீனவர் நம்மைக் காஞ்சிபுரத் தொண்டை மண்டலம் கடந்த சென்னை செல்லும் வேலூர்ச் சாலையில் அமைந்துள்ள திருப்புட்குழி எனும் 57 ஆம் திவ்விய தேசத்திற்கு அழைத்துச் செல்ல, மரகத வல்லி உடனுறை விசயராகவப் பெருமாளைச் சேவிக்கின்றோம்.

கிழக்கு நோக்கி இருந்த கோலச் சேவை சாதிக்கும் விசயராகவன், மரகத வல்லியுடன் வண்ணவாள் முகத்தோடு வாழ்கின்றான் வணங்குமினே எனக்காட்டும் மீனவர் எண்ணரிய புகழுடைய இராமனுசமுனி நண்ணிப் பயின்ற இடம் நல்லதிருப்புட்குழி எனத்திவ்விய தேசத்தைக் காட்டுகிறார்.

புட்குழி என்றதன் காரணமும் கூறுகிறார். புள் என்றால் பறவை; சீதையைக் கவர்ந் தெடுத்துச் சென்ற இராவணனை எதிர்த்த சடாயு அமைதியுற்ற இடம் என்பதால் இங்குள்ள தீர்த்தத்திற்குச் சடாயு தீர்த்தம் என்கிறார். குழி என்பது ஆழமான தீர்த்தம் ஆகும்.

சோழ நாட்டு வைத்தீஸ்வரன் கோயில் தீர்த்தம் சடாயு தீர்த்தம் எனப்பட்டாலும் அதற்கான புராணக் கதை வேறாகும். சம்பாதி – சடாயு ஆகிய சோதரர் இருவரும் சூரிய மண்டலம் செல்ல நினைந்து மேலே செல்ல, ஆதவனின் வெப்பம் தாங்காமல் இறகு தீய்ந்திட, சம்பாதி காட்டில் விழ, சடாயுவோ வைத்தீஸ்வரன் கோயில் பக்கம் விழ – அதனால் பாவம் தீர அங்குள்ள தீர்த்தத்தில் மூழ்கியதால் சடாயு தீர்த்தம் எனப் பட்டதாம் என்க!

திருப்புட்குழி சடாயு அமைதியுற்ற இடமாதலால் இந்த இடத்தின் வைபவம் இராமனுசருக்கு மிகவும் பிடித்திருந்தது என்பது அவரது வரலாற்றில் இன்றியமையாததாகும்.

திருவரங்கத்தில் திருக்குலத்தாரோடு இராமானுசரின் தொடர்பைக் கண்ட பிராமணர்கள் இராமானுசரை வெறுத்த போது, நாம் வணங்கும் இராமனே அஃறிணையான சடாயுவாம் பறவைக்கு ஈமக்கடன் செய்தான் என்றால், சாதிபேதம் காட்டுவானேன் என்ற புரட்சியைப் பிரகடனப் படுத்தினார்.

சடாயு தன் தந்தை தயரதருக்கு நண்பன் என்பதால் தந்தை நிலைக்கு உயர்ந்து விட்ட சடாயுக்கு இராமன் மகன் என்ற நிலையில் ஈமக் கடனாற்றிய வைபவச் சாயலுக்கு உரிய இடமே இத்திவ்விய தேசப் புட்குழி என்ற தத்துவத்தை மீனவர் கூறியதால் புத்திரஸ்தானத்தில் பெற்றோர்க்கு இறுதிக் கடனாற்றும் உலகளாவிய தத்துவம் நிலை நாட்டும் இடம் என எல்லோரும் உணர்ந்தனர். திருமங்கை

ஆழ்வாரின் மங்களாசாசனச் சிறப்புணர்ந்த அளவில் அடுத்த திவ்வியமாம் திரு நின்ற வூரை அடைகின்றோம்.

திண்ணனூர் எனும் மறுபெயருடைய இத்திவ்விய தேசத்தில் சுதாவல்லி என்ற வித்தியாசமான பெயரை உடைய தாயாருடன் பக்தவத்சலப் பெருமாளைச் சேவிக்கச் செய்கிறார் மீனவர்.

கிழக்கு நோக்கிய நின்ற கோலத்தில் சேவை சாதிக்கும் பெருமாளை வாத்சல்யத்துடன் வணங்கும் நாம்,

***என்னையே பெற்றெடுத்த எழில்தாயார் சுதாவல்லி***
***தன்னையே மணங்கொண்டான் தருதுயரம் தடுத்தருள்வான்***

எனக் கூறும் மீனவரின் பரந்தாமன் பாமாலையைப் பாடித் துதிக்க, திருமங்கை ஆழ்வாரின் அரிய மங்களாசாசனமும் நினைவில் குடிகொண்டது.

சுதா என்ற சொல்லுக்கு, தன் அடைவான அமிர்தம் என்று பொருளாகும். ஆன்மாக்களைக் கருவுறாமல் பெற்றெடுத்தவர் என்ற குறிப்பில் இத்திவ்விய தேசத்தாயாருக்கு என்னையே பெற்றெடுத்த தாயார் என ஒவ்வொருவரும் நினைக்கச் செய்யுமாறு அமைந்த வித்தியாசமான பெயராகும். இதனால் பிரபஞ்சத்தின் ஆன்மாக்களுக்கு அருளார் அமிர்தத்தைத் தருவதால் மீண்டும் மீண்டும் பிறக்க வைக்காமல் ஒருமுறை பிறக்க வைத்த இப்பிறப்பே போதுமானதாய்ச் செய்யும் அருமைப்பாட்டைச் செய்ததால் என்னை ஒரு முறைக்கு மேல் அடுத்த முறை பிறக்க வைக்காத அமிர்த வல்லித்தாயாக உள்ள வாத்சல்யத்தை இத்திவ்விய தேசத் தாயார் பெயர் நினைவு கூர்வதாக மீனவர் சொல்லக் கேட்டு ஆனந்தித்த நாம் மீனவருடன் திருவள்ளூர் செல்கிறோம்.

அங்ஙனம் செல்லுங்கால் விட்டகுறை தொட்ட குறையாகத் திரு நின்றவூர் என்றதன் பெயர்க் காரணத்தை அறிய விரும்பும் ஆர்வத்தை வழிப்பயணச் சோர்வைத் தவிர்க்கும் விதமாக மீனவரை வினவ – அரிய தொரு சொற்பொழிவையே செய்தார்.

திரு என்றால் செல்வம். அது எங்கும் ஓரிடத்தில் நினறு நிலைப்பதில்லை, அந்த உலகாயதச் செல்வம் போலில்லாமல் நின்று நிலைப்பதான செல்வமாய் இருப்பவனே பரந்தாமன் என்பதால் அவன்

திண்ணமாய் (உறுதியாய்) நின்று நிலைப்பதான ஊர் என்றதால் திண்ணனூராம் திருநின்ற ஊர் எனப்பட்டதாம் என்றார் மீனவர்.

மேலும் இங்குள்ள பெருமாளுக்குப் பத்தராவிப் பெருமாள் என்ற மறுபெயர் உள்ளதற்கான விளக்கத்தையும் மீனவர் கூறினார். பக்தர்களுக்கு உயிராக இருப்பவன் என்ற கருத்தில் பத்தர் ஆவிப் பெருமான் எனப்பட்டாராம்.

இந்தப் பக்தவத்சலப் பெருமாள் என்னும் பத்தராவிப் பெருமாள் என்ற பெயரிலேயே இப்பரந்தாமன் பாமாலைத் தொடர்ச்சியில் 16ஆவது திவ்வியமாகத் திருக்கண்ண மங்கையை முன்பே தரிசித்ததை மீனவர் நினைவு கூர, கனகவல்லித் தாயார் உடனாய வீரராகவப் பெருமாள் குடி கொண்டிருக்கும் திருஎவ்வுள் என்னும் திருவள்ளூரில் நுழைகின்றோம்.

தாயார் கனகவல்லி என்னும் வசுமதி பெயருடன் வீற்றிருக்கும் அம்பாள் உடனாய மூலவர், வீரராகவப் பெருமாளைத் தரிசிக்கும் நாம் கிழக்கு நோக்கிய புஜங்கசயனமாக உள்ள பரந்தாமனின் அம்சத்தில் ஈடுபடுகிறோம்.

வெற்றிக்கு மேல் வெற்றிபெறும் திருப்புட்குழியின் விஜயராகவனே ஈண்டு வீரத்திற்கு மேல் வீரத்தைக் காட்டும் வீரராகவனாகப் பரந்தாமன் அம்சத்தில் திருஎவ்வுள் தலத்தில் திருமால் சேவை சாதிக்கின்றார்.

சாலிகோத்ர மகரிஷிக்கு அருள் பாலித்த வீரராகவன் அம்மகரிஷியைப் பார்த்து நான் சயனிப்பது எவ்வுள்! என வினவியதால் இத்திவ்விய தேசம் எவ்வுள் எனப்பட்டதாக மீனவர் ஊர்ப் பெயரை விளக்கினார்.

***முன்சாலி கோத்திர முனிவனுக்குத் தானருளிப்***
***பின்னர்த் திருமழிசைப் பிரானாரின் பாசுரங்கள்,***
***திருமங்கை பாசுரங்கள் கருதியவன் எவ்வுள் இலங்கினான்***
என்கிறார் மீனவர்.

உள் என்ற சொல் ஏழாம் வேற்றுமை உருபாய் இடப் பொருளைக் குறிக்கும். அடியார் உள் இடமாகத் தங்கியிருந்தாலும் பக்தர்கள் சேவிக்க எங்கே தங்குவது எனச் சாலி முனிவரிடம் கேட்ட போது எங்கும்

பரந்தாமனுக்குரிய இடமாயினும் முனிவர் சட்டென்று இங்கே இரும் எனக் கட்டளையிட்டவாறு எவ்உள்? என்பதே திருவள் ஊர் என்றானதாக உணரப்பட்டதாய் மீனவர் வீரராகவனின் பிரவாகத்தைக் கூறக் கேட்ட அளவில் அதாவது பழனநீர்ச் சேற்றுவயல் பயில்கின்ற திருவள் ஊர் நமையாள்வான் வந்தவன் எனக் கூறிய அளவில் சென்னையின் உள்நகர்ப் பகுதியான திருவல்லிக் கேணி தேசத்தைக் காட்டுகிறார் மீனவர்.

சைவமரபில் அட்டவீரட்டம் எனச் சிவனுக்குரிய வீரத் தலங்களாக எட்டினைக் கூறுவர். அதுபோல் வைணவத்திலும் பஞ்ச வீரத்தலங்கள் என்று சிலவற்றைக் கூறுவர். அவற்றுள் திரு அல்லிக்கேணி முதலாவதாகும்.

குருஷேத்திரப் போரில் கண்ணன் பாண்டவர் பக்கமிருந்து பார்த்தனுக்குத் தேரோட்டிய வைபவம் ஒன்றே வீரத்தின் வீரம் எனலாம்.

இந்தத் திருவல்லிக் கேணியைப் பிருந்தாரண்ய ஷேத்திரம் என்று கூறுவர். மூலவர் ருக்மணி பிராட்டி உடனாய வேங்கட கிருஷ்ணனாயினும் உற்சவராம் பார்த்த சாரதிக்கே எல்லாப் பெருமையும் என்கிறார் மீனவர்.

மேலும் வைணவ திவ்விய தேச அனுபவத்தில் இந்த அல்லிக் கேணி வைபவம் தனியானது என்கிறார் மீனவர். ஈண்டு ஐந்து சன்னதிகளைக் காட்டி அவற்றின் சிறப்பையும் கூறுகிறார். கீதை வழியை வகுத்தளித்த கீதா சாரியனாக முகத்தில் வித்தியாசமான கட்டு மீசையுடன் வீரமாய், கிழக்கு நோக்கி நிற்கும் பார்த்த சாரதி சன்னதியே பிரதானமாகும். இதனை மீனவரே தம் பாமாலையில்,

***இடைவாளும் முடியழகும் எழில்வதனப் பேரழகும்***
***உடைய சாரதியாய் அடிமருவு திருவல்லிக் கேணி***

என்பதாகப் புகழ்கிறார். நின்ற கோலத்துப் பார்த்தசாரதியைப் போல வேதவல்லி சமேத புஜங்க சயனத்தில் இருக்கும் ரங்கநாதன் சன்னதியை வணங்கியதும் நாம் சீதாபிராட்டி உடனாய்த் தெற்கு நோக்கிய கோலத்து சீராமபிரான் சன்னதியையும் வணங்குகிறோம்.

இங்ஙனம் கிருஷ்ணாவதாரம் இராமாவதாரம் சன்னதிகளுடன் மேற்கு நோக்கிய நரசிம்மராம் தென்னிய சிங்கரின் நரசிம்மாவதாரச் சன்னதியைச் சேவிக்கின்றோம்.

இவை எல்லாவற்றிற்கும் மேலாக நிஷ்காமிய பலன் கருதாத அடியார்களைத் தேடிவந்து அருள் பாலிக்கும் கருடசேவை வரதராசனின் தெற்கு நோக்கி இருக்கும் அமர்ந்த கோலச் சன்னதியை வணங்கிய வாறே திருமங்கையார், பேயாழ்வார், திருமழிசை யாழ்வார்களின் மங்களா சாசனங்களை நினைவூட்டி அங்குள்ள பல கல்வெட்டுக்களின் சிறப்பைக் கூறி நம்மை மீனவர் அடுத்த திவ்வியமாம் திருநீர் மலைக்கு இட்டுச் செல்ல அவர்பின் சென்று பரந்தாமனின் சில அம்சமாக விளங்கும் நின்ற கோல நீலமுகில் வண்ணனையும் இருந்த கோல சாந்த நரசிம்மரையும் கிடந்த கோல ரங்கநாதரையும் அடுத்தடுத்து வணங்குகின்றோம். இந்த அற்புதத்தை,

***திருநீர் மலை என்னும் தெய்வத் திருப்பதிக்கண்***
***ஒருநீர்நல் வண்ணனென உயர்ந்தோங்கி நின்றானை***
***திருமார்பை அலங்கரித்த திருப்பாயல் கிடந்தானை,***
***இருதாள்கள் தொழுமா றங்கிருந்தானை ஏத்துமினே!***

என மீனவர் பாமாலையில் பாடியுள்ளார்.

தாயாருக்கு அணிமா மலர் மங்கைப் பெயராம். அணிமா மலர் என்றது பூவினுக்கு அருங்கலம் பொங்குதாமரை என்றாற் போல அழகிய பெரிய மலராம் தாமரையைக் குறிப்பதாகும்.

இங்ஙனம் நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்துமான அவதாரங்களை ஒருசேரக் காட்டும் திருநீர் மலையைத் திருமங்கையாரின் மங்களாசாசனப் பாடல்களை நினைவூட்டியவாறு மீனவர், மாமல்லபுரச் சாலையில் உள்ள திருவிடவெந்தை எனும் திருவடந்தை திவ்விய தேசத்திற்கு நம்மைக் கூட்டிப் போக அங்கே உள்ள கோமள வல்லி உடனாய இலட்சுமி வராகனைச் சேவிக்கின்றோம்.

கிழக்கு நோக்கிச் சேவை சாதிக்கும் பெருமாளுக்கு நித்திய கல்யாணப் பெருமாள் என்ற உற்சவ மூர்த்தப் பெயரும் உண்டு என்கிறார் மீனவர்.

இங்குள்ள பெருமாளுக்கும் பெருமாட்டிக்கும் திருவேங்கடத்தானின் தாடையில் பொட்டாகிய தழும்பு உள்ளது போலத் தழும்புகள் உண்டு.

இந்தத் தலப் பெயரைத் திருஇட எந்தை எனக் கூறுவர், திருமகளைத் தன் மார்பில் இடந்தந்த தந்தை என்ற கருத்தில் மீனவர் பாடும் போது,

***திருவான இலக்குமிக்குத் திகழ்மார்பில் இடம் தந்தே***
***அருள்கின்ற எந்தைஎன அணிநாமம் கொண்டபதி***

என்கிறார்.

மேலும் பூமியை வராக மூர்த்தியாக இடந்து (தோண்டி) காத்ததால் திரு இட எந்தை என இலட்சுமிவராகனாய்க் காட்சி தரும் தலமாம் என்றும் மீனவர் கூறும் போது,

***ஓரடியைப் பூமியின் மேல் ஓரடியைச் சேடனின் மேல்***
***சேருகின்ற இடத்தொடையில் தேவியினை வைத்த பிரான்***

எனத் தலப் பெருமையைக் கூறுகிறார்.

மேற்படியாகத் திருமகளைத் தன் மார்பில் கொண்டாலும் இடப்பாகத்தில் கொண்டதற்கான புராணக் கருத்தும் ஒன்று உள்ளதை மீனவர் கூறினார். காலவ மாமுனிவரின் பெண்கள் 360 பேரையும் தினமும் ஒருத்தியாகக் கலியாணம் செய்து கொண்டதால் பரந்தாமன் நித்திய கல்யாணப் பெருமாள் எனப்பட்டதாகப் பரந்தாமன் பாமாலையில் காலவமா முனிக்கருளி என்ற குறிப்பால் உணர்த்தியவாறு திருமங்கை மன்னரின் மங்களாசாசனப் பெருமை நினைந்து கடல் மல்லையாம் மாமல்லபுரத்திற்குச் செல்கிறோம்.

உலகு புகழ் பெற்ற அத்திவ்விய தேசம் பற்றி அடுத்துக் காண்போமாக!

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### வினைத் தூய்மை

(செயலின் தூய்மை)

1. **துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்**
   **வேண்டிய எல்லாம் தரும்.**

துணைநலம் - ஒருவனுக்கு உண்டான துணையின் நன்மை;

ஆக்கம் தரூஉம் – செல்வத்தைத் தரும்; வினைநலம் – செய்ய உள்ள செயலின் நன்மை ; வேண்டிய எல்லாம் தரும் – அவன் வேண்டுவனவற்றை எல்லாம் தரும்.

ஒருவனுக்கு உண்டான துணையின் நன்மை செல்வத்தைத் தரும்; அவன் செய்ய உள்ள செயலின் நன்மை அவன் வேண்டுவனவற்றை எல்லாம் தரும். எனவே செயலில் தூய்மை வெற்றியைத் தரும்.

தரூஉம் – இசைநிறை அளபெடை

**2. என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.**

என்றும் – எக்காலத்தும்; ஒருவுதல் வேண்டும் – நீக்கிவிட வேண்டும்; புகழொடு நன்றி பயவா வினை – புகழையும் நன்மையையும் தராத செயல்களை.

புகழையும் நன்மையையும் தராத செயல்களை எக்காலத்தும் நீக்கிவிட வேண்டும்.

பயவா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

**3. ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னும் அவர்.**

ஓஒதல் வேண்டும் – தவிர்க்க வேண்டும்; ஒளிமாழ்கும் – தம் புகழ்கெடுவதற்கு; செய்வினை – காரணமாகிய செயல்களை; ஆஅதும் என்னும் அவர் – உயர்வாக வேண்டும் என்று எண்ணுபவர்.

உயர்வாக வேண்டும் என்று எண்ணுபவர் தம் புகழ் கெடுவதற்குக் காரணமாகிய செயல்களைத் தவிர்க்க வேண்டும்.

ஓஒதல், ஆஅதும் – இசைநிறை அளபெடைகள்

ஓஒதல் – ஓவுதல் – ஓதல் – ஓஒதல்

**4. இடுக்கட் படினும் இளிவந்த செய்யார்
நடுக்குஅற்ற காட்சி யவர்.**

இடுக்கட் படினும் – தாம் துன்பப்பட நேர்ந்தாலும்; இளிவந்த – இழிவான செயல்களை; செய்யார் – செய்யமாட்டார்; நடுக்கு அற்ற – நடுங்குதல் இல்லாத; காட்சியவர் – தெளிவினை உடையவர்கள்.

நடுங்குதல் இல்லாத தெளிவினை உடையவர்கள் தாம் துன்பப்பட நேர்ந்தாலும் பிறருக்கு இழிவான செயல்களைச் செய்ய மாட்டார்கள்.

இளிவந்த – குறிப்பு வினையாலணையும் பெயர்

செய்யார் – எதிர்மறை வினைமுற்று.

**5. எற்றென்று இரங்குவ செய்யற்க செய்வானேல்**
**மற்றுஅன்ன செய்யாமை நன்று.**

எற்றென்று – எத்தன்மையது ஆகியது என்று; இரங்குவ – வருந்தும் படியான செயல்களை; செய்யற்க – செய்யக் கூடாது; செய்வானேல் – அவ்வாறு செய்துவிட்டால்; மற்று அன்ன – வருத்தத்தினை; செய்யாமை நன்று – செய்யாதிருத்தல் நல்லது.

தான் செய்த செயல் எத்தன்மையது ஆகியது என்று வருந்தும்படியான செயல்களைச் செய்யக் கூடாது; அவ்வாறு செய்து விட்டால் அதற்காக வருத்தத்தினைச் செய்யாதிருத்தல் நல்லது.

இரங்குவ – குறிப்பு வினையாலணையும் பெயர்

செய்யற்க – எதிர்மறை வியங்கோள்

மற்று – வினைமாற்று

**6. ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க**
**சான்றோர் பழிக்கும் வினை.**

ஈன்றாள் – தன்னைப் பெற்ற தாயின்; பசிகாண்பான் ஆயினும் – பசியைக் காணும் நிலையினை உடையவனாயினும்; செய்யற்க – செய்யக் கூடாது; சான்றோர் பழிக்கும் வினை – அறிவுடைய பெரியோர் பழித்துக் கூறும் செயல்களை;

தன்னைப் பெற்ற தாயின் பசியைக் காணும் நிலையினை உடையவனாயினும் அறிவுடைய பெரியோர் பழித்துக் கூறும் செயல்களைச் செய்யக் கூடாது.

**7. பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்**
**கழிநல் குரவே தலை.**

பழிமலைந்து எய்திய – பழிகளை மேற்கொண்டு அடைந்த; ஆக்கத்தின் – செல்வத்தினை விட; சான்றோர் – சான்றோர்களின்; கழிநல்குரவே – மிகுந்த வறுமையே; தலை – உயர்ந்ததாகும்.

பழிகளை மேற்கொண்டு அடைந்த செல்வத்தினை விடவும் பழியில்லாத சான்றோர்களின் மிகுந்த வறுமையே உயர்ந்ததாகும்.

ஆக்கத்தின் – இன் ஒப்புப் பொருள், எல்லைப் பொருளுமாம்

கழிநல்குரவு – உரிச்சொல் தொடர்

நல்குரவே – ஏ தேற்றம்

**8. கடிந்த கடிந்துஒரார் செய்தார்க்கு அவைதாம்**
**முடிந்தாலும் பீழை தரும்.**

கடிந்த – நூலோர் விலக்கியவற்றை; கடிந்து ஒரார் – விலக்கி நீக்காமல்; செய்தார்க்கு – செய்தவர்களுக்கு; அவைதாம் – அச் செயல்கள் தாம்; முடிந்தாலும் – நிறைவேறினாலும்; பீழை தரும் – துன்பத்தைத் தரும்.

நூலோர் விலக்கிய செயல்களை விலக்கி நீக்காமல் செய்தவர்களுக்கு அச்செயல்கள் நிறைவேறினாலும் துன்பத்தைத் தரும்.

கடிந்த – குறிப்பு வினையால் அணையும் பெயர்

முடிந்தாலும் – உம் எச்ச உம்மை

**9. அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்**
**பிற்பயக்கும் நற்பா லவை.**

அழக்கொண்ட எல்லாம் – பிறர் கண்கலங்கும் படியாக வினை செய்து கொண்ட பொருள் எல்லாம்; அழப்போம் – தான் கலங்கும்படியாகப் போய்விடும்; இழப்பினும் – பொருளை இழந்தபோதிலும்; பிற்பயக்கும் – பின்பு பயனைத் தரும்; நற்பாலவை – நல்வினையால் வந்த பொருள்கள்.

பிறர் கண் கலங்கும் படியாக வினை செய்து கொண்ட பொருள் எல்லாம் தான் கலங்கும் படியாகப் போய்விடும்; நல்வினையால் வந்த பொருள்களை இழந்த போதிலும் பின்பு அவை பயனைத் தரும்.

போம் – போகும் என்பதன் இடைக்குறை

பயக்கும் – எதிர்கால வினைமுற்று

**10. சலத்தால் பொருள்செய்து ஏமாக்கல் பசுமண்**
**கலத்துள்நீர் பெய்துஇரீஇ யற்று.**

சலத்தால் – வஞ்சகத்தாலும் தீவினைகளாலும்; பொருள் செய்து –

பொருளைச் சேர்த்து; ஏமாக்கல் - மன்னனைக் காத்தல்; பசுமண் கலத்துள் - பசிய மண் பானைக்குள்; நீர்பெய்து - நீரை ஊற்றி; இரீஇயற்று - இருத்திவைப்பது பேலாகும்.

வஞ்சகத் தீவினைகளால் பொருளைச் சேர்த்து மன்னனைக் காத்தல் என்பது பசிய மண் பானைக்குள் நீர் ஊற்றி இருத்தி வைப்பது போலாகும்.

பசியமண் பானையில், நீர் தங்காது நீங்கிவிடுவது போலத் தீவினையால் சேர்த்த பொருள் தங்காது.

ஏமாக்கல் - மரூஉ (ஏமமாக்கல்)

இரீஇ - சொல்லிசை அளபெடை

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம்

### 57. வலை வீசினது

சோமசுந்தரப் பெருமான் மீனாட்சியம்மையாருக்கு ஒருநாள் தனியிடத்திலே இருந்து கொண்டு மிகவும் ரகசியமான முறையிலே வேதத்தின் உட்பொருளை உபதேசித்து அருள்வாராயினர். பெருமான் அருள் கொண்டு இயம்பும் இனிய திருமொழிகளை யாது காரணத்தாலோ பயத்தோடும், கவலையோடும் விருப்பம் இல்லாமலே தேவியார் கேட்டுக் கொண்டிருந்தார். சோமசுந்தரப் பெருமான் தேவியாரின் அலட்சியப் போக்கைக் கண்டு, மாதே! நீ எம்மிடத்தே பாராமுகம் காட்டி வேத விழுப்பொருளை விருப்பம் இல்லாமல் கேட்டாய்! நீ செய்தது பெருங்குற்றம் ஆதலால், எத்தகைய தருமோ விரதமோ கொள்ளாமல் மீன் பிடித்து வாழும் இழிந்தோ ராகிய வலைஞர் குலத்திலே மகளாகத் தோன்றுவாய், என்று ஆணையிட்டருளினார். உடனே மீனாட்சியம்மையார் பயமடைந்து தேவாதி தேவா! அடியாள் தங்களைப் பிரிந்து வாழ முடியுமா? என்று வணங்கி வினாவினார்.

தேவியின் துன்பம் கண்ட பெருமானும் கடற்கரைச் சோலையில் வதியும் வலைஞர் மன்னனுக்கு மகளாக நீ வளர்ந்து வருகின்ற நாளிலே யாம் வந்து உன்னை மணம் புரிவோம் என்று திருவாய் மலர்ந்தருளினார். அம்மையும் விடை பெற்றுச் செல்லலானார்.

விநாயகக் கடவுள் இதை அறிந்தார். தனது தந்தை யாராகிய சிவபெருமான் திருமுன் வந்து, இதனால் தானே இப்படி யெல்லாம் நடந்தது என்று சொல்லிக் கொண்டே அங்கேயிருந்த வேதச் சுவடிகளைத் தனது துதிக்கையினால் வாரியெடுத்து கடலிலே வீசி யெறிந்தார். முருகக் கடவுளும் தனது தந்தையார் திருக்கரத்தில் விளங்கிய சிவஞான போதச் சுவடியைப் பிடுங்கிக் கடலிலே எறிந்து விட்டார்.

சிவபெருமான் நந்திகேசுவரரைச் சினந்து நோக்கி நாம் இருக்கின்ற நேரமும் தெரியாது; இவர்களை உள்ளே அனுமதித்துச் சும்மா இருந்து விட்டாய்; அதனாலே பொல்லாங்கு விளைந்தது. ஆதலால், குற்றத்துக்குக் காரணமான நீ சுறாமீனாகப் பிறந்து கடலிலே துன்பமடையக் கடவாய் என்று சபித்தருளினார். விநாயகருக்குச் சாபம் இட்டால் அது தன்னையே சாரும் என்பதால் அவருக்குச் சாபம் இடவில்லை. முருகனை நோக்கி வணிகர் குலத்திலே நீ ஊமைப் பிள்ளையாகப் பிறக்கக் கடவாய், என்று பணித்தருளினார்.

சிவபெருமானது ஆணையினால் உமாதேவியார் பரதவர் மகளானாள், நந்திதேவர் சுறாமீனாகிக் கடலிலே புகுந்தார், முருகப்பெருமான் உருத்திரசருமனாகப் பிறந்தார்.

பாண்டிய நாட்டின் கிழக்குக் கடற்கரையிலே பாக்கம் என்ற ஊர் ஒன்றிருந்தது. அது ஆழமான உப்பழியென்ற அகழியாலும் உயர்ந்து வளர்ந்திருந்த தாழைகளினாலான மதிலாலும் சூழ்ப்பட்டிருந்தது. மீன் பிடிப்போரின் குடிசைகள் பல அங்கேயிருந்தன. அத்தகைய வலைஞர் சேரியிலே ஒருவன், தான் முற்பிறப்பிலே தவம் செய்தவனாக இருந்தும் சற்றே பாவம் செய்விட்டதாலே வந்து தோன்றினான். அவன் பரதவர்கள் அனைவருக்கும் அரசனாகத் திகழ்ந்தான். வலைஞர்கள் அவனிடம் மீன்களைத் திறமையாகக் கொண்டு வந்து நிறைத்தனர். பரதவர்கோனும் சிவபெருமானிடத்திலே பக்தியுடையவனாக இருந்தான். அவன் பல ஆண்டுகளாக மகப்பேறு இல்லாமல் பெரிதும் வருந்திக் கொண்டிருந்தான்.

ஒரு தினம் அவ்வரசன் தனது உறவினர்களோடு சேர்ந்து கொண்டு மீன் பிடிப்பதற்காகக் கடலை நோக்கிச்சென்று கொண்டிருந்தான். செல்லும் வழியிலே பனைமர மொன்றின் நிழலிலே, சிவபெருமானது திருவாணையினால் வரலஞர்கோன் செய்த தவப்பயனாக,

உமாதேவியார் தமது இச்சையினால் ஒரு பசுங்குழந்தையின் உருவமேற்று அழுதுகொண்டு கிடந்தருளினார். பரதவர் வேந்தன் செந்திருவாய் திறந்து அழுகின்ற இன்பத்திருக் குழந்தையைக் கண்டான்; பெரு மகிழ்ச்சி கொண்டான். இக் குழந்தை யார்பெற்ற செல்வமோ? கடல்மகளோ? நீர்மகளோ? கான்மகளோ மகப்பேறில்லாத எனக்குச் சோமசுந்தரப் பெருமான் அருள்கனிந்து ஈந்தருளிய குழந்தையே இது? என்று எண்ணித் தனது வலதுபுஜம் துடிக்க மிகுந்த பரிவுடன் எடுத்துவந்து தன் மனைவி கையிற் கொடுத்தான். பிறவிக்குருடன் கண் பெற்றதுபோல மகிழ்ந்து அவனது மனைவியும் பேரன்புடன் குழந்தையை வாங்கியணைத்துக் கொண்டாள். பரதவர் அனைவரும் கடலைப்போல் ஆரவாரம் செய்தனர். பரதவ மகளிர் அனைவரும் குதூகலித்துக் கைகொட்டிக் குரவை பாடினர்; அருந்தனமாகக் கிடைத்த குழந்தையை மிகுந்த செல்வமாக வளர்த்தனர். வலைஞர் கோவும் கோமாட்டியும் அருட் குழந்தையும் பருவத்திற்கேற்ப அறிவும், அழகும் விளையாட்டும் காட்டி நன்றாக வளர்ந்து வந்தது.

சிவபெருமான் ஆணையிட்டருளியபடியே நந்திகேசுவரரும் சுறாமீன் உருவம்கொண்டு அலைகடலிலே சென்று மூழ்கி இனிதே யிருந்தார். நந்திச் சுறாமீன், விநாயகனும் முருகனும் முன்பு கடலிலே எறிந்த ஏடுகளை யெல்லாம் தனது தலையின்மீது சுமந்து சென்றார், தன் உள்ளத்தின் உள்ளே சிவபெருமான் திருவடியைச் சிந்தித்தார்.

குறுக்கும் நெடுக்குமாகக் கடலிலே அங்குமிங்கும் அலைந்து திரிந்த வலிய சுறாமீன் பெரிய துன்பம் விளைத்தது. கடல் நீரைக் கலக்கியது. தோணி படகு, சோங்கு ஆகியவற்றை யெல்லாம் அது நெருங்கி முட்டிமோதிக் கவிழ்க்கும். தன்னை எதிர்க்க வரும் சுறா மீன்களையெல்லாம் தனது கொம்பில் கோர்த்து வீசியெறியும். முரட்டுச் சுறாமீன் கடலிலே எப்போது தோன்றும், என்ன செய்யும் என்பது, தெரியாதிருந்தது. நெய்தல் தலைவன் அப்பெரு மீன் செய்யும் இன்னலைக்கண்டு பொறுக்காமல் ஒரு முறை தனது கிளைஞருடன் கடலிலே சென்று அதன் மேலே பெரிய வலையை வீசினான். பல படகுகளையும் தோணிகளையும் உடைத்தெறிந்த அந்தப் பொல்லாச்

சுறாமீன் வலையுள் அகப்படாமல் தாக்குப் பிடித்துப் போக்குக் காட்டியது. இங்குமங்கும் எங்குமாகத் தோன்றிய மீன் வலைப்படவில்லை. எப்பாடுபட்டும் அதனைப் பிடிக்க மாட்டாத வலைஞர்கோன் ஏமாந்தான்; நொந்தான், அயர்ந்து விட்டான். இனி இதனை யாரால் பிடிக்க முடியுமோ? என்று எண்ணி ஏங்கி மனமுடைந்தான். உடன் சென்ற வலைஞரும் ஏவலரும் கவலையுடன் கலங்கி நின்றனர்.

பின்னர் பரதவர்கோமன், இந்தக் கடலிலே கிடந்து கலக்கும் பெரும் சுறாமீனை இங்கு வந்து எவன் பிடிக்கிறானோ அவனே என்னுடைய மகளுக்கு மண மகன் ஆகும் தகுதி பெற்றவனாவான் என்று உறுதி பூண்டான்.

உரிய பருவக் காலம் வந்துற்றது. வலைஞர் கோனின் உறுதி கைகூடும் நாள் நெருங்கியது. சிவபெருமான் அருள் புரியத் திருவுளம் கொண்டார். தனது இச்சாமாத்திரத்திலே ஒரு வலைஞன் உருவம் எடுத்தருளினார். தேவ மீனவனின் உருவம் கருத்துக் காட்டியது. அரையிலே கச்சையை இறுகக் கட்டியிருந்தார். இடையிலே உடைவாள் செருகியிருந்தார். தோலில் மேலாடை தரித்திருந்தார். தேன் சொட்டும் நெய்தல் மலர்க் கண்ணியை தலையிலே சூட்டியிருந்தார். சிவகணத் தலைவன் ஒருவனும் வலைஞன் வேடன் புனைந்து தோளிலே வலை சுமந்து, மீன் கூட்டினை முதுகிலே தாங்கிய உதவியாளாகப் பெருமான் பின்னே நடந்து வந்தான். சோலை சூழ்ந்த வலைச்சேரிப்பாக் கத்தை வந்தடைந்தார் வலைஞர் பெருமான்.

தனது பாக்கத்துக்குப் புதிதாக வந்திருந்த பரதவர் குலக்காளையைப் பார்த்துப் பெருமகிழ்வும் அதிசயமும் அடைந்தான் பரதவர்கோன். அவனைப் பார்த்து, அழகிய நம்பியே! நீ யார்? சொல் என்று கேட்டுக் கொண்டான். நான் மதுரைப் பரதவரின் தந்தை போன்ற அரசனுடைய குமாரன். என்னால் படைக்கவும், காக்கவும் அழிக்கவும் முடியும். தவிர, பெரிய மீன்களெல்லாம் அகப்படுமாறு வலைவீசுவதிலே வல்லன் யான் என்று கம்பீரமாக மொழிந்தார். இவன் முன்னுக்குப் பின் முரண்பாடாகப் பேசுகின்றானே உண்மையாகவே இவன் பரதவர் மகன்தானா? என்று ஐயமுற்றான் தலைவன். பின்னர், அப்பனே!

இந்தத் துறையிலே சுறாமீன் ஒன்று கட்டுக்கடங்காது நாசம் புரிந்து துள்ளித் திரிகின்றது. அது வலிமையும் சீற்றமும் மிகவுடையது. அதனைக் குறிவைத்துப் பிடித்து விடுவாயானால் எனது குமாரியை உனக்கு மணம் செய்து கொடுப்பேன் என்று கூறினான்.

வலைஞர் பெருமான் உடனே படகிலேறி விரைந்து கடலுள் சென்றார். தன்னுடன் வந்தவனது தோளின் மேல் கிடந்த வலையை வாங்கிப் பெரிதாக விரிய வீசினார். இறைவன் வீசிய தெய்வீகத் திருவலையிலே சுறாமீன் சிக்கிக்கொண்டு விட்டது. வலியடங்கிய சுறாமீனை இழுத்துக் கரையிலே போட்டார் பெருமான். வலைஞர்கள் எல்லாரும் நெருங்கிக்கூடி வந்து ஆரவாரம் செய்தனர். நம் குலத்துக்குரிய தெய்வமகன் இவனே யாவான்! என்று பாராட்டி வியப்பெய்தினர்.

நெய்தல் தலைவன் பெருமகிழ்வு எய்தினான். பறைகள் ஒலி முழக்க வலைய மாதர் குரவை செய்ய வலைஞர் பிரானுக்குத் தன் மகளைத் திருமணம் செய்துகொடுத்தான் வலைஞர் கோமான்.

மணக்கோலம் புனைந்த வலைஞரும் கோமகளும் மறைந்தருளினார்கள். உடனே சிவபெருமான் மீனாக்ஷியம்மையுடன் காட்சி தந்தருளினார்; நந்திகேசுவரரும் தன்னுருவம் பெற்று விளங்கினார்.

ரிஷபாரூடரான சிவபெருமான் உமாதேவியார் இருவரது கருணாகடாக்ஷம் அடைந்ததால் வலைஞர் கோமான் தனது முன்னைய நல்லறிவைப் பெற்றான். இறைவனை மனமாரத் துதித்து வணங்கினான்.

தம்மைப் போற்றி நின்ற பரதவர் தலைவனைப் பார்த்துச் சிவபெருமான், அன்ப! பலவாண்டுகள் குழந்தைப் பேறில்லாமல் வருந்தியது கண்டிரங்கி உமா தேவியாரையே உனது மகளாகத் தோன்றச் செய்தோம், முறையறிந்து வந்து மணந்து கொண்டோம். இவ்வுலகத்திலே நீ குபேர சம்பத்தினைப் பெற்று பல போகங்களை அனுபவித்துப் பின்பு எமது சிவலோகம் வந்து சேர்வாயாக, என்று திருவருள் புரிந்தருளினார்.

பின்னர் நந்திகேசுவரரோடும் அடியவர் திருக்கூட்டத் தோடும் உத்திரகோசமங்கை என்னும் க்ஷேத்திரத்தை அடைந்தருளினார் சிவபெருமான். அத்திருவுத்தரகோச மங்கையிலே எழுந்தருளியிருந்து உமாதேவியார் பயபக்தி சிரத்தையுடன் கேட்க, வேதரகஸ்யப் பொருளையெல்லாம் அமிர்தமென உபதேசம் செய்தருளினார். தம்மிடம் பக்திகொண்ட சிவனடியார்களும் சிவயோகிகளுமான அறுபதினாயிரம் பேர்களுக்கும் வேதவிழுப் பொருளை உபதேசித்தருளினார்.

பின்பு மீனாக்ஷியம்மையாரோடு மதுரை சேர்ந்தருளினார் சோமசுந்தரப் பெருமான்.

*(தொடரும்...)*

## மேம்படு கற்பின் மிக்கார்
**(ம.கார்மேகம்)**

இளையான் தான் குடிமாறன் அடியார்க்கும் அடியேன் என்பது திருத்தொண்டத் தொகை. இதில் இளையான்குடி மாறன் மற்றும் அவரது அடியார்க்கும் அடியேன் என்றும் பொருள் கொள்ளலாம். இளையான்குடி மாறனாகிய அடியார்க்கும் அடியேன் என்று எச்ச உம்மையாகவும் கொள்ளலாம். அவரைத் திருத்தொண்டர் திருவந்தாதி கயல் ஆர் இளையான்குடியுடை மாறன் எம் கற்பகமே என்று போற்றுகின்றது. திருத்தொண்டர் புராண வரலாறு என்னும் பகுதி முளைவித்து ஆக்கும் இளையான்குடி மாறர் என்று கூறுகிறது. எனவே அவரை இளையான்குடி என்னும் ஊரில் தோன்றிய மாறர் எனப் பெயர் கொண்ட அடியார் எனக் கருதலாம். பெரிய புராணம் இளையான்குடிப் பதி மாறனார் எனக் கூறுகிறது. இந்தப் பகுதிகளில் எந்த இடத்திலும் மாற நாயனாரின் மனைவி பெயர் குறிப்பிடப்பட வில்லை.

சேக்கிழார் அவரைத் தாரமாதர் என்றும் மனைவியார் என்றும் மேம்படு கற்பின் மிக்கார் என்றும் செழுந்திரு மனைவியார் என்றும் பாராட்டுகிறார். கற்பெனப்படுவது சொற்றிறம் பாமை என்பது போலத் திருநீலகண்டரிலும் காண்கிறோம்; இயற்பகை நாயனார் புராணத்திலும் காண்கிறோம். ஆனால் இளையான்குடி மாறனாருடைய மனைவியார் கணவர்தம் செயல்பாட்டில் தன்னை முழுமையும் ஈடுபடுத்திக் கொண்ட

கடமை உணர்வைக் காண முடிகிறது. அவர் மறுத்திருந்தால் தொண்டு எவ்வாறு நிறைவேற முடியும்? ஆகவே இளையான்குடி மாற நாயனார்க்கு உரிய சிறப்பிடம் அவர்தம் மனைவிக்கும் உரியதாகின்றது என்பதை இறைவன் காட்சியால் உணரலாம்.

ஏரினால் உழவு செய்து வருகின்ற வளமெல்லாம் அடியார்க்கு உதவுதல் பழக்கமாகக் கொண்டு செல்வம் கொண்ட பயனைப் பெற்றவர் இளையான்குடி மாறனார். நேர வந்தவர் யாவராயினும் பக்தியோடு பணி செய்கின்றவர் மாறனார். அவ்வாறான காலத்தில் செல்வம் குறைந்த போதும் வறுமை நேர்ந்த போதும் அத்தொண்டில் மாறனார் எத்தகைய நிலையைக் கொண்டுள்ளார் என்பதைக் காட்டத் தில்லை மன்னிய பெருமான் வருகிறார். தான் கொண்ட பணியில் தளராத மனம் படைத்தவர் மாறனார். அந்தத் தளர்ச்சியின்றிச் செயல்பட்டதற்கு அவருடைய துணைவியாரும் காரணம் தானே! அதனால் தான் மேம்படு கற்பின் மிக்கார் என்று சேக்கிழார் பாராட்டுகிறார்.

மழைக்காலம்; இரவுப் பொழுது; நல்ல பசியோடு சிவன் அடியார் வருகின்றார்; வீடு பூட்டப்படுகின்ற நேரம்; அந்தப் பொழுதில் வந்த அடியாரை எதிர் கொண்டார் மாறனார்; நனைந்து வந்த அடியாரின் மேனி ஈரத்தைப் போக்கினார்; அமர இடம் கொடுத்தார்; அவருக்கு வயிறார உணவு ஊட்ட ஆசை கொண்டார் மாறனார் என்கிறார் சேக்கிழார்.

உடனே தார மாதரை நோக்கிப் பசியோடு வந்தவர்க்கு என்ன செய்வது என்று கேட்கிறார் மாறனார். நமக்கு முன்பு இங்கு உணவில்லை என்றாலும் இமக்குலக் கொடியாகிய உமையம்மையைப் பாகமாகக் கொண்ட சிவபெருமானுக்கு இனியவராகிய அடியாரை எப்படி உண்பிப்பது? எவ்வாறு உணவு சமைப்பது? என்று கேட்கிறார்.

அதுகேட்ட மாது, ஒருவழியும் புலப்படவில்லை; அயலார் யாரும் இனிமேல் தரமாட்டார்கள்; இருட்டிய தாலே தரமாட்டார்கள்; போவதற்கு வேறு இடமும் இல்லை; தீது செய்கின்ற வினையினை உடையேனுக்கு என்ன செய்வதென்றும் தெரியவில்லை. இருப்பினும் பகலில் நம் வயலிலே விதைத்த செந்நெல்லை முளையோடு வாரிக் கொண்டு வந்தால் அமுதாக்கலாம். அதுவன்றி வேறு ஒன்று நான் அறியவில்லை என்கிறார்.

மனைவியார் கூறியதும் பெற்ற செல்வம் பெரிது என மகிழ்கிறார் மாறனார். வயலுக்குச் சென்று நடுவிருள் யாமத்தில் காலினால் தடவிச் சென்று முளைத்த நெல்லை வாரி எடுத்துக் கொண்டு வந்தார்; மனைவியார் அதனை வாங்கிச் சேற்றினை அலம்பி ஊற்றினார்; அடுப்பு மூட்ட விறகில்லை என்றார். நாயனார் நீடும் அலக்கினை அறுத்து வீழ்த்தினார். அடுப்பு மூட்டி நெல்லை வறுத்து அரிசி ஆக்கி உலையிற் பெய்தார் மனைவியார்; வெறுப்பில்லாமல் அடிசில் ஆக்கினார். கறிக்கு ஏதாவது வேண்டுமே என்றார். மாறனார் புன்செய்க் குறும்பயிர் பறித்துக் கொண்டு வந்தார். மனைவியார் கறிகள் ஆய்ந்து நீரில் கழுவிப் புனிதமான பாத்திரத்தில் வேறு வேறு கறியமுதாக்கினார். பழைய நினைவினால் இப்போது ஏற்பட்ட குறையை நொந்து அமுதாக்கினார். மாறனாரை நோக்கி அடியாரை அழையுங்கள்; ஈண்ட அமுது செய்விப்போம் என்றார். மாறனாரும் அடியாரின் துயில் அகற்றி எழுந்தருள் பெரியோய்! ஈண்ட அமுது செய்தருள்க என்றார். அப்போது அடியார் சோதியாய் எழுந்து தோன்றினார். செழுந்திரு மனைவியாரும் தொண்டரும் திகைத்து நின்றனர். இறைவன் ஏலவார் குழலாளாகிய உமையோடு இடப வாகனத்தில் தோன்றினான். அன்பனே! அடியார்க்குப் பூசை செய்த நீ உன் மனைவியோடும் எழுந்து என்பெரும் உலகை எய்துவீர் என்றான். குபேரன் உங்களுக்கு ஏவல் செய்ய இன்பமாய் அமர்ந்திருக்க வேண்டும் என்றான்.

இளையான்குடி மாற நாயனார் இரவில் அடியார்க்குத் தொண்டு செய்த சிறப்புக்குப் பக்கத் துணையாக நின்றவர் அவர்தம் மனைவியார். அந்த இரவு பொழுதில் விருந்தெதிர் கோடலுக்கு உடன்பட்டு என்னென்ன தேவையோ அவற்றை எல்லாம் கொண்டுவரச் செய்தவர் மாறனாரின் மனைவியார். அரிசி செய்ததும் கறிசமைத்ததும் அவர்தானே! அதைவிடச் சிறப்பான ஒன்று; அடியார்க்கு எப்படி உணவு சமைப்பது? என்று வினவும் மாறனாரிடம், தீதுவினையேற்கு என்று தன்னை, தன் இயலாமையை உணர்ந்து பேசும் போதும் தன்னால் விருந்து பேண இயலவில்லையே என்று வருந்துகிற மனைவியாரைத் தான் சேக்கிழார் காட்டுகிறார்.

அது மட்டுமல்ல; என்ன செய்ய வேண்டும் என்பதை முறையாக, மாறனாரை நெறிப்படுத்திச் செயலாற்றி அடிசில் ஆக்குகிறார். இந்த

இடத்தில் மாறனார், மனைவியார் சொல்படிதான் எல்லாம் செய்தார் என்பதற்கு ஒரு குறிப்பாகத் தொடர் ஒன்றைப் பயன்படுத்துகிறார் சேக்கிழார். ஈண்ட அமுது செய்விப் போம் என்று மனைவியார் சொன்ன தொடரையே அடியாரை எழுப்பும் போது மாறானாரும் ஈண்ட அமுது செய்தருள்க என்று கூறுகிறார். எனவே அந்த மேம்படு கற்பின்மிக்கார் கூற்றின் வழியே மாறனார் செயல்பட்டார் என்பதை அறிய முடிகிறது. அதனால் தான் மாறனார்க்கு மட்டும் காட்சி தராமல் அவருடைய துணைவியாருக்கும் அருள் புரிந்தான் சிவபெருமான் எனலாம்.

இமக்குலக்குடி பாகர்க்கு இனியவர் என்று குறிப்பிடுவதால் இறைவன் உமையோடு எழுந்தருளுகிறான். கணவனும் மனைவியுமாகக் கருத்தொருமித்துச் செயல்பட்டுத் தொண்டாற்றியதால் கணவன் மனைவியாக இறைவனும் எழுந்தருளினான் என்பதை இப்புராணம் உணர்த்துகிறது. எனவே மாறனாரின் தொண்டுக்கு மனைவியாரின் பங்கு இன்றியமையாததாக இருந்ததை இப்புராணத்தின் வழி உணரலாம். அதனால் தான் அவரை மேம்படு கற்பின் மிக்கார் என்றார் சேக்கிழார்.

## மடாலய நிகழ்வுகள்

25.09.2021 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் சிலப்பதிகாரம் – வஞ்சிக்காண்டம் – குன்றக்குரவை பற்றி முனைவர் பெ. குபேந்திரன் உரையாற்றினார்.

தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் 10ஆவது ஆண்டு குருபூசை விழாவை முன்னிட்டு 10.10.2021 அன்று திருவாசகம் முற்றோதல் நடைபெற்றது.

11.10.2021 அன்று நூல் வெளியீட்டு விழாவில் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமை ஏற்று ஆசியுரை வழங்கினார். முனைவர் கரு. முத்தய்யா எழுதிய மணிமேகலை உரைநூலை முனைவர் சொ.சொ.மீ. சுந்தரம் வெளியிட்டார். முனைவர் நா. வள்ளி பெற்றுக் கொண்டார். ஸ்ரீமத் சுவாமி வேதாநந்தானந்தா ஞானவாசிட்டம், பிரம்மகீதை என்ற நூல்களை வெளியிட்டார். திரு.சொ. வள்ளியப்பன், திரு. சொர்ணம் சுவாமி, திரு நீ. இரவிச் சந்திரன் ஆகியோர் பெற்றுக்கொண்டனர். தொடர்ந்து பேரா. ம. கார்மேகத்தின் மேடையில் மேகம் என்ற நூலும் குன்றக்குடி ஆறுமுகப் பெருமான் பாமாலை என்ற நூலும் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான

தேசிக சுவாமிகள் வெளியிட முனைவர் சொ.சொ. மீ. சுந்தரம் பெற்றுக்கொண்டார்.

மணிமேகலை உரை நூலைப்பற்றி முனைவர் நா. வள்ளி மதிப்புரை வழங்கினார். உரையாசிரியர் கரு. முத்தய்யா ஏற்புரை நிகழ்த்தினார். முனைவர் சொ.சொ.மீ. சுந்தரம் சிறப்புரை ஆற்றினார்.

விழாவின் தொடக்கமாகத் தமிழ்த்தாய் வாழ்த்தைத் தொடர்ந்து கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேனிலைப்பள்ளி மாணவச் செல்வங்கள் திருப்புகழ் பாராயணம் செய்தார்கள். சுவாமிகள் அவர்கள் மாணவர்களுக்குச் சிறப்புச் செய்தார்கள்.

தொடக்கத்தில் பேரா. ம. கார்மேகம் வரவேற்புரை வழங்க நிறைவாக முனைவர் மு. பழனியம்மாள் நன்றியுரை கூற விழா இனிதே நடந்தது.

11.10.2021 அன்று பிற்பகலில் நகரத்தார் சிறப்புப்பற்றிய படக் காட்சியுடன் குறுந்தகடு வெளியிடப் பெற்றது. முனைவர் சொ.சொ. மீ. சுந்தரம் குறுந்தகட்டை வெளியிட்டுச் சொற்பொழிவாற்றினார். முனைவர் நா. வள்ளி குறுந்தகட்டைப் பெற்றுக் கொண்டு விளக்கங்கள் அளித்தார்.

12.10.2021 அன்று தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் 10ஆவது குருபூசை நிகழ்ச்சி நடைபெற்றது. தற்போது ஆதினப் பொறுப்பேற்றிருக்கும் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் ஆதீனப் பொறுப்பெற்று 10 ஆண்டுகள் நிறைவு பெற்ற பெருமையும் நினைவில் கொள்ளப்பட்டது.

13.10.2021 அன்று குருபூசை விழாவை முன்னிட்டு நடத்தப்பெற்ற பள்ளி, கல்லூரி மாணவர்களுக்கான பல்வேறு போட்டிகளில் வெற்றிபெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன. முன்னதாக மெட்ரிக் மேனிலைப்பள்ளி முதல்வர் திருமதி மணிமொழி மோகன் அனைவரையும் வரவேற்றார். சுவாமிகளின் ஆசியுரையுடன் தொடர்ந்த விழாவில் திருவாடானை அரசு கலைக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் மு. பழநியப்பன் மாணவர்களுக்கு வாழ்த்துரை வழங்கிப் பரிசுகளையும் வழங்கினார்.

பள்ளிப் பிள்ளைகளின் கலை நிகழ்ச்சியும் நிகழ்ந்தது. நிறைவாக முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளி முதல்வர் திருமதி. மணிமொழி முருகன் நன்றியுரை வழங்கினார்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்